8th November 1965]

(*b*) whether the Government are aware of the fact that in such cases, a sum of Rs. 3 per cent is being received both by the officials and non-officials concerned for getting sanctioned the accommodation; and

(*c*) if so, what steps the Government propose to take to put a stop to this malpractice?

THE HON. SRI N. S. S. MANRADIAR: (அ) சில மத்திய பாங்குகளும், ஆரம்பச் சங்கங்களும் கூட்டுறவுச் சங்கங்கள் கொடுக்கவேண்டிய கடன் நிலுவைகளை, அச்சங்கங்களுக்குப் புதிதாகக் கடன் வழங்குவதன் மூலம் சரிகட்டினவென்று அரசாங்கத்துக்குத் தெரிய வந்துள்ளது. இத்தகைய தவறான வழக்கத்திற்கு முற்றுப்புள்ளி வைக்குமாறு ஆணை பிறப்பிக்கப் பட்டுள்ளது.

(இ) இத்தகைய பழக்கங்கள் இருப்பதாக அரசாங்கத்துக்கு தெரியவில்லை.

(உ) இக்கேள்விக்கு இடமில்லை.

**திரு. எஸ். கே. சம்பந்தன்:** இந்த மாதிரியான துஷ்பிரயோகங் கள் வெகுநாட்களாக நடந்துவந்திருப்பது அரசாங்கத்திற்குத் தெரியுமா? அப்படியானால் இவற்றை உடனடியாகத் தடுக்க அரசாங்கத்தார் எந்த விதமான நடவடிக்கை எடுத்திருக்கிறார் கள்?

**கனம் திரு. என். எஸ். எஸ். மன்றாடியார்:** இப்போது இதற்கு இடைவேளை கொடுக்கப்படுகிறது; 15 நாட்களுக்குப் பிறகுதான் புதிய கடன் பெற முடியும் என்று இடைவேளை கொடுக்கப் படுவதால் இந்த மாதிரியான 'மால்ப்ராக்டிசெஸ்' நடக்க முடியாது.

**திரு. எஸ். கே. சம்பந்தன்:** பதினைந்து நாள் இடைவேளை கொடுக்கும் முறை இருந்தாலும், பல சென்ட்ரல் பாங்குகளிலும், ப்ரைமரி பாங்குகளிலும் சொசைடிகளிலும் இது சரியாக அமல் நடத்தப்படவில்லை என்று அரசாங்கத்திற்குத் தகவல் வந்திருக் கிறதா? இவ்வாறு நடக்கிறதா என்று அரசாங்கம் மேலும் கவனிக்குமா?

**கனம் திரு. என். எஸ். எஸ். மன்றாடியார்:** இதற்கு, மூலக் கேள்விக்கு பதிலளித்தபோதே பதில் சொல்லியிருக்கிறேன். இந்த மாதிரியான 'மால்ப்ராக்டிசெஸ்' நடக்காமலிருப்பதற்கு நாங்கள் நிறைய ஏற்பாடுகள் செய்து வருகிறோம். ஆகையால் இனிமேல் இந்த மாதிரியான 'மால்ப்ராக்டிசெஸ்' இருக்க முடியாது.

*Joint Farming Societies*

* 142 *Q.*—SRI N. V. NATARAJAN: Will the Hon. the Minister for Co-operation be pleased to state—

(*a*) whether the Central Government have suggested to the State Government that the number of Joint Farming Societies should be increased; and

(*b*) if so, the details thereof?

THE HON. SRI N. S. S. MANRADIAR : (அ) & (இ) மத்திய சமுதாய வளர்ச்சி கூட்டுறவுத் துணை அமைச்சர் நடப்பு ஆண்டில், முன்னோடி கூட்டுப் பண்ணைச் சங்கங்களை அமைப்பதற்கான வளர்ச்சி வட்டாரங்களைத் தேர்ந்தெடுக்க விரைவில் நடவடிக்கை எடுக்குமாறு வற்புறுத்தியுள்ளார். மேற்படி முன்னோடிச் சங்கங்கள் மூலம் பெறும் அனுபவம் நான்காம் திட்டத்தில் கூட்டுப் பண்ணைச் சங்கங்கள் அமைக்கும் வேலைத் திட்டத்தை வகுப்பதில் பெரிதும் பயன்படும்.

3-20 p.m. **திரு. ஆர். வெங்கடாசலம் :** முன்னோடியாக சொசைடி யூனியன்கள் எவையேனும் தெரிந்தெடுக்கப்பட்டிருக்கின்றனவா ? அப்படியானால், அவை எவை, அவை எத்தனை ?

THE HON. SRI N. S. S. MANRADIAR : The State Farming Board at its meeting held on the 30th June 1965 discussed the question of selecting blocks in which pilot societies could be formed during the current year. The Board felt, however, that it would be better not to organise any more Joint or Collective Farming Societies. The Board also made the following recommendation :—

"Target need not be fixed for organization of joint collective farming societies. There may be, however, no objection to organise Joint Farming societies, if small pattadars voluntarily come forward provided they are genuinely interested in the formation of such societies and there is good scope for the successful working."

**திரு. கே. பாலசுப்ரமணிய அய்யர் :** இந்த மாதிரியான சொஸைடிகளால் ஏதாவது பிரயோஜனம் உண்டா என்று சர்க்கார் கவனித்திருக்கிறார்களா ? பிரயோஜனம் இல்லை என்பது என் அபிப்பிராயம்.

**கனம் திரு. என். எஸ். எஸ். மன்றாடியார் :** அதனால்தான் நான் முதலில் சொன்ன விஷயங்களைப் படித்தேன்.

**திரு. என். வி. நடராசன் :** இந்தத் திட்டத்திற்கு மத்திய அரசாங்கம் ஏதாவது உதவி செய்திருக்கிறதா ?

**கனம் திரு. என். எஸ். எஸ். மன்றாடியார் :** என்னிடம் இப்போது அந்தத் தகவல் ஒன்றும் இல்லை.

**திரு. எம். சங்கரலிங்கம் பிள்ளை :** நில உச்ச வரம்புச் சட்டப்படி எடுத்துக் கொள்ளப்படும் உபரி நிலங்களை இந்தக் கூட்டுறவுப் பண்ணைகளுக்குக் கொடுக்க அரசாங்கம் உத்தேசித்திருக்கிறதா ? அப்படியானால் அதற்கு ஏதேனும் நடவடிக்கை எடுக்கப்பட்டிருக்கிறதா ?

**கனம் திரு. என். எஸ். எஸ். மன்றாடியார் :** அந்த மாதிரி உத்தேசம் எதுவும் இதில் வரவில்லை.

8th November 1965]

திரு. கே. வி. ராமசாமி : இப்போது நம் மாநிலத்தில் கூட்டுறவுப் பண்ணைகள் எத்தனை நடைபெற்று வருகின்றன? அவைகளால் லாபம் எவ்வளவு, நஷ்டம் எவ்வளவு?

கனம் திரு. என். எஸ். எஸ். மன்றாடியார் : இந்த விவரம் இப்போது என்னிடம் இல்லை. இதற்கு தனிக் கேள்வி போட வேண்டும்.

திரு. ஏ. கே. தங்கவேல் முதலியார் : இந்த 'ஜாயிண்ட் ஃபார்மிங் ஸொஸைடீஸ்' எத்தனை நடக்கின்றன? இவற்றில் எத்தனை 'ஃபெய்ல்யூர்' ஆயின?

கனம் திரு. என். எஸ். எஸ். மன்றாடியார் : கனம் அங்கத்தினரின் இந்தக் கேள்விக்கு விவரமாக பதில் வேண்டுமானால் தனிக் கேள்வி போட வேண்டும்.

*Outbreak of fire in Government Timber Depot in Kanyakumari district*

* 143 Q.—Sri M. SANKARALINGAM PILLAI : Will the Hon. the Minister for Co-operation be pleased to state—

(a) whether there was any outbreak of fire in the timber depot maintained by the Government in the Kanyakumari district during the years 1963–64 and 1964–65;

(b) if so, the loss incurred; and

(c) the cause for the fire?

The Hon. Sri N. S. S. MANRADIAR : (அ) நாகர்கோவிலில் உள்ள விற்பனை நிலையத்தில் தீ விபத்து ஏற்படவில்லை. ஆனால், அரசாங்க ரப்பர் தோட்டங்களில் உள்ள காடுகள் துறை டிப்போக்களிலும் திருநெல்வேலி தெற்கு டிவிஷனில் தேக்கு மர நடவுக்காக வெட்டி வைக்கப்பட்டிருந்த மரங்களிலும் 1964, 1965-ம் ஆண்டுகளில் தீ விபத்து ஏற்பட்டது.

(இ) கன்னியாகுமரியில் உள்ள அரசாங்க ரப்பர் தோட்டங்களில் ரூ. 44,021 நஷ்டம் ஏற்பட்டது.

திருநெல்வேலி தெற்கு டிவிஷனில் ரூ. 390 நஷ்டம் ஏற்பட்டது.

(உ) குத்தகைக்காரர்களோ அவர்களது ஆட்களோ அணைக்காமல் எறிந்து விட்டுப்போன பீடித்துண்டுகள் தீ பரவுவதற்குக் காரணமாக இருந்திருக்கலாம் என்று சந்தேகிக்கப்படுகிறது.

திரு. எம். சங்கரலிங்கம் பிள்ளை : கோடை காலத்தில் ரப்பர் தோட்டங்களில் ரப்பர் மரத்தைச் சுற்றியிருக்கும் சருகுகளையும் காய்ந்த இலைகளையும் ஒதுக்கி அவற்றிற்குத் தீ வைப்பது, தோட்டத்தைப் பாதுகாத்து நிர்வகிப்பவரின் வேலை. அரசாங்க ரப்பர் தோட்டத்தில் இந்த வேலையைச் சரியாகச் செய்யாததால் இந்த மாதிரியான விபத்து ஏற்பட்டது. தனியார் ரப்பர்